கழக வெளியீடு: ககூ

# நீதிநூற் கொத்து

## மூலமும் உரையும்

[இரண்டாம் பாகம்]

*

க. நீதி வெண்பா

உ. அறநெறிச் சாரம்

௩. நீதிநெறி விளக்கம்

*




திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
சென்னை-1. மதுரை-1. திருநெல்வேலி-6.
1970

57-4

# பதிப்புரை

ஆத்திசூடி, கொன்றை வேந்தன், உலகநீதி, வெற்றிவேற்கை, மூதுரை, நல்வழி, நன்னெறி முதலிய ஏழு நூல்களையும் பதவுரை, விளக்கவுரைகளுடன் ஒருசேரக் கட்டடஞ் செய்து நீதிநூற் கொத்து முதற் பாகமாக வெளியிட்டுள்ளோம்.

இப்போது நீதிவெண்பா, முனைப்பாடியார் இயற்றிய அறநெறிச்சாரம் குமரகுருபர சுவாமிகள் இயற்றிய நீதிநெறி விளக்கம் ஆகிய மூன்று நீதிநூல்களையும் பதவுரை விளக்க வுரைகளுடன் நீதி நூற்கொத்து இரண்டாம் பாகமாக வெளியிடுகின்றோம்.

இதன் கணடங்கிய நீதிவெண்பாவுக்கும், நீதிநெறி விளக்கத்துக்கும் விருத்தியுரையும், இதுகாறும் உரை எழுதப்படாதிருந்த அறநெறிச்சாரத்துக்குப் பதவுரையும் விளக்கவுரையும் எழுதிச் சேர்க்கப் பெற்றிருப்பதால், தமிழ் மக்கள் இந்நூலை வாங்கிப் போற்றிப் பயிலுவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

கழக வெளியீடு : ௬௬

# நீதி வெண்பா



கழகப்புலவராயிருந்த

**திரு தி சு பாலசுந்தரம் பிள்ளை அவர்கள்**

(இளவழகனர்)

எழுதிய உரையுடன்



திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி-6 சென்னை - 1

1966

## முகவுரை

'நீதிவெண்பா' என்னும் பெயரினாலேயே இந்நூல் வெண்பா யாப்பினால் இயற்றப்பட்டிருக்கின்றதென்பதும், அவைதாம் நீதிகளை உணர்த்துகின்றனவென்பதுந் தெளிவாகின்றன.

இதனை இயற்றினார் இன்னாரென்பது தெரியவில்லை. இந்நூலின் முதலிலிருந்து கடைசிவரையில், இடையிடையே பதினொரு பாட்டுக்கள் தூய தனித்தமிழ்ச் சொற்களாலான செய்யுட்களும் (14, 15, 24, 35, 36, 49, 59, 74, 76, 77, 89), ஏனைய அவற்றிற்கு மாறாக நிரம்பிய வடசொற் கலப்பினாலான செய்யுட்களுமாக விரவிக் காணப்படுகின்றமையாலும், முன்னுணர்த்தப்பட்ட நீதிகளே பின்னும் வருகின்றமையாலும் (40, 50), எவ்வெச் செய்யுட்களை அடுத்து நிற்றல் வேண்டுமோ அவ்வவை தம்மை அடுத்து நில்லாது சிதறுண்டன போலச் சில செய்யுட்கள் ஆங்காங்கும் இயைபின்றியே நிற்கின்றமையாலும் (34, 37), சில பாட்டுக்கள் அழகிய அரிய சொற்களாலும் இனிய எளிய நடையினாலும் அரும்பெரு நுட்பக்கருத்துக்களை உணர்த்தாநிற்ப (37, 52, 72), ஏனைய அவற்றிற்கு மாறான சொற்களாலும், நடையினாலும் உணர்த்துகின்றமையாலும், சில பழங்காலச் செய்யுட் போக்கினையும் (29, 44), சில பிற்காலச் செய்யுட் போக்கினையுந் தழுவி நிற்கின்றமையாலும் சில அடர்ந்து நிரம்பிய கருத்துடையவாயும் (35, 37), மற்றுஞ் சில அம்முறை இலவாயு மிருக்கின்றமையாலும், இன்னும் இன்ன பல ஏதுக்களாலும் இந்நூல் ஓராசிரியரால் இயற்றப்படாது யாரோ ஒருவராற் றொகுக்கப்பட்ட தொகை நூலாகுமோ என்னும் ஐயமுந் தோன்றுகின்றது. இதன் காப்புச் செய்யுள்,

> "மூதுணர்ந்தோ ரோதுசில முதுரையைப் பேதையேன்
> நீதிவெண்பா வாக நிகழ்த்துவேன்"

என்று கூறுதலும், அதற்கேற்ப, இந்நூல் தான் எடுத்துக்கொண்ட நீதிகளை ஒரொழுங்கான முறையின் நின்று உணர்த்தாமையும் அவ் வையத்தினை மேலும் வளர்ப்பனவாயிருக்கின்றன. இனி, இந் நூன்முழுவதுஞ் சைவசமயமே உயர்த்தப்பட்டு நிற்ப

தும் (58, 95, 97), சமணம் இழிக்கப்பட்டு நிற்பதும் (26), இன்ன சிலவும் ஓராசிரியரின் இயல்பினைக் காட்டுகின்றமையின், அவை அவ்வையக் கோட்பாட்டிற்கு எதிராவனவாகும். எனினும் அவ் வியல்பு தொகுத்தோர் மேலுஞ் செல்லுமாதலாலும், ஏனைப் பல ஏதுக்களை நோக்க இன்ன சில சிற்றேதுக்களே யாதலாலும், இவ்விரோ, ரேதுக்களைக் கொண்டு அவ்வையங் கழலுமா றில்லை யென்க.

இனி, இதன்கட் காணப்படுஞ் செய்யுட்களும், அவற்ரு லுணர்த்தப்படும் அறிவுரைகளுஞ் சிறு பிள்ளைகள் முதல் எத் திறத்தவருங் கற்றுணர்தற் குரியவையா யிருக்கின்றன. இதன் 37, 39, 91, ஆம் செய்யுட்களில் உவமைத் திறனும் 72 ஆம் செய்யு ளில் உருவகத்திறனும் அழகும் நுட்பமும் பொருந்த அமைந் திருக்கின்றன. 49 ஆஞ் செய்யுளில், 'தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க' லென்னுந் திருவள்ளுவர் திருமொழியும் எடுத்தாளப்பட் டிருக்கின்றது. சிறு பிள்ளைகளுந் தம் பருவத்திற்கேற்ற ஒழுக்கங் களை அறிந்து தமது நடையினுங் கொண்டு வருவதற்கேற்ற நீதிகள் இந்நூலில் நிரம்பியிருத்தலால், இது பள்ளிக்கூடங்களி லும் பாடமாக வைக்கப்படுகின்றது.

இந்நூலுக்கு வேறு உரை நூல்களிருந்தாலும், அவற்றின் கண் இல்லாத தெளிவான பதவுரை கருத்துரைகளோடு விளக்க உரை நுட்பங்கள் பலவும் இதன்கண் எளிதான நடையில் எழுதிச் சேர்க்கப்பட்டிருத்தலாலும், நீதிநூல்களின் விளக்க வுரைகளெல்லாம் பெரும்பாலும், நீதியைப்பற்றியவையாகவே இருத்தல் வேண்டுமென்னும் முதன்மை நோக்கம்பற்றி அவ் விளக்கவுரை தானும் எழுதப்பட்டிருத்தலாலும், இவ்வுரை வெளிவரல் இன்றியமையாததாயிற்று.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# நீதி வெண்பா

## மூலமும் உரையும்

காப்பு

மூதுணர்ந்தோ ரோதுசில மூதுரையைப் பேதையேன்
நீதிவெண்பா வாக நிகழ்த்துவேன்—ஆதிபரன்
வாமான் கருணை மணியுதரம் பூத்தமுதற்
கோமான் பெருங்கருணை கொண்டு.

(இதன் பொருள்.) ஆதிபரன் - முழுமுதற் கடவுளாகிய சிவபிரானுடைய, வாமம் மான்-இடப்பாகத்தில் உள்ள உமையம்மையார், கருணை - அருளினாலே, மணி உதரம் - தமது அழகிய திருவயிற்றில், பூத்த-தோற்றிய, முதல் கோமான் - முதற்பிள்ளையாகிய பிள்ளையாரின், பெருங் கருணைகொண்டு - பேரருளைத் துணையாகக் கொண்டு, மூதுணர்ந்தோர் - பேரறிவாளர், ஓது - சொல்லிய, சில மூதுரையை - சில அறிவு மொழிகளை, பேதையேன் - அறிவிற் சிறியேனான யான், 'நீதி வெண்பா' ஆக - நீதி வெண்பா என்னும் நூலாக, நிகழ்த்துவேன் - செய்வேன்.

(கருத்து.) யான் 'நீதி வெண்பா' நூல் செய்தற்கு முழுமுதற் கடவுள் துணை என்பது.

வாமம் என்பது வாம் எனக் குறைந்து நின்றது. 'பெருங் கருணை கொண்டு நிகழ்த்துவேன்' என்க. இது கடவுள் வணக்கச் செய்யுள்.

நூல்

தாமரைபோன் முத்துச் சவரங்கோ ரோசனைபால்
பூமருதேன் பட்டுப் புனுகுசவ்வா—தாமழன்மற்
றெங்கே பிறந்தாலு மெள்ளாரே நல்லோர்கள்
எங்கே பிறந்தாலு மென்.

(இ - ள்.) தாமரை - தாமரைப் பூவும், பொன் - பொன்னும், முத்து - முத்தும், சவரம் - சாமரையும், கோரோசனை - கோரோசனையும், பால் - பாலும், பூ - அழகிய, மரு - மணமுள்ள, தேன் - தேனும், பட்டு - பட்டும், புனுகு - புனுகும், சவ்வாது-சவ்வாதும், ஆம் அழல்-எரியும் நெருப்பும் (ஆகப் இப் பதினொன்றும்) எங்கே பிறந்தாலும்-எவ்வளவு தாழ்ந்த இடத்திலிருந்து கிடைத்தாலும், எள்ளார் - (அவைகளை உலகத்தார்) இகழமாட்டார்கள். (ஆதலால்), நல்லோர்கள் - நல்ல தன்மை யுடையவர்கள், எங்கே - எந்த இனத்திலே, பிறந்தாலும்-பிறந்திருந்தாலும், என்-அதனல் தாழ்வு என்ன? (தாழ்வில்லை என்பது.)

(க - து.) நல்லோர் தாழ்ந்த குடியிற் பிறந்தாலும் உயர்ந்தோரே யாவர்; அவரைத் தாழ்ந்தவரென்று யாரும் இகழமாட்டார்கள்.

தாமரை, சேற்றில் விளையும். பொன், மண்ணிற் கிடக்கும். முத்து, கடலிலுள்ள சிப்பிப்பூச்சியிலிருந்து வெளிப்படும். சாமரம், ஒரு விலங்கின் மயிர்க்கற்றை. கோரோசனை, ஆவின் வயிற்றில் அகப்படும். பால், ஆவின் மடியிலிருந்து பெறப்படும். தேன், கொழுப்படையிற் கசியும். பட்டு, ஒரு பூச்சியிலிருந்து வெளிவரும். புனுகு ஒருவகைப் பூனையின் அழுக்கு. அழல் - தாழ்ந்த கட்டையிலிருந்து எழுந்தெரிவது. மற்று, ஏ : அசைகள்.

(1)

அரிமங் திரம்புகுந்தா லானை மருப்பும்
பெருகோளிசேர் முத்தும் பெறலாம்—நரிநுழையில்
வாலுஞ் சிறிய மயிரேலும்புங் கர்த்தபத்தின்
தோலுமல்லால் வேறுமுண்டோ சோல்.

(இ - ள்.) அரி - சிங்கத்தின், மங்திரம் - குகையினுள்ளே, புகுந்தால் - நுழைந்தால், ஆனை - ஆனையினுடைய, மருப்பும் - (விலையுள்ள உயர்ந்த பொருள்களான) கொம்பும் - (தந்தமும்), பெருகு ஒளி - மிகுந்த ஒளி, சேர் - உள்ள, முத்தும் - அக்கொம்பிலுள்ள முத்தும், பெறலாம்-கண்டெடுக்கலாம்; நரி நுழையில்-நரியிருக்கும் குழியில் (பார்த்தால்), சிறிய வாலும்-அறுந்துபோன வால்களும், மயிர்-குறுமயிர்களும், எலும்பும்-துண்டு துண்டான எலும்புகளும், கர்த்தபத்தின் - கழுதையின், தோலும்-சிதைந்த தோலும், அல்லால்-(ஆக இந்தத் தாழ்ந்த பொருள்கள்) தவிர, வேறும் - வேறு உயர்ந்த பொருள்களும், உண்டோ - அவ்விடத்தில் இருக்குமோ, சொல் - நீ சொல் பார்ப்போம்!

(க - து.) பெரியோரைச் சேர்ந்தால் உயர்வும் சிறியோரைச் சேர்ந்தால் இழிவும் உண்டாகும்.

சிறிய என்பது தாழ்ந்த என்னும் பொருளில் வந்தது. அதனை வால், மயிர், எலும்பு, தோல் என்பனவற்றோடு சேர்த்து உரைப்பினும் ஆம். உயர்வினால் சிங்கத்தின் குகை மந்திரம் எனப்பட்டது. (2)

அறிவன் பகையேனும் அன்புசேர் நட்பாம்
சிறுவன் பகையாம் செறிந்த—அறிவுடைய
வென்றி வனசரன்றான் வேதியனைக் காத்தான்முன்
கொன்றதொரு வேந்தைக் குரங்கு.

(இ - ள்.) முன் - முன்னொரு காலத்தில், செறிந்த - மிகுந்த, அறிவு - அறிவும், வென்றி - வெற்றியும், உடைய-, வனசரன் - (பகைவனான) வேடன், வேதியனை - பார்ப்பனன் உயிரை, காத்தான் - காப்பாற்றினான், குரங்கு - ஒரு குரங்கு, ஒரு வேந்தை - ஓர் அரசனை, கொன்றது - (அறிவில்லாமையால்) கொன்று விட்டது, (அதுபோல); அறிவன் - அறிவுடையோன், பகை எனும் - பகைவனானாலும், அன்பு சேர் நட்பு - அன்போடு கூடிய நண்பனாக, ஆம் - ஆவான், (ஆனால்) சிறுவன் - அறிவில்லாதவன், (நண்பனாயிருந்தாலும்) பகை - பகைவனாக, ஆம் - ஆய் விடுவான்.

(க - து.) அறிவில்லாதவர்களின் நட்பைவிட அறிவுடையவர்களின் பகைமை நல்லது.

பகை என்பது பகைவனைக் குறிப்பதுபோல, நட்பு என்பது நண்பனைக் குறித்தது. வனசரன் - காட்டில் வாழ்பவன்; அவன் வேடன். வேந்தன் என்பது வேந்து எனக் கடை குறைந்தது. நட்பில் அன்பு சேர்ந்த நட்புதான் சிறந்ததென்பதற்கு 'அன்பு சேர் நட்பு' என்றார். அஃதாவது : அறிவுடையோர் ஒருவருக்கொருவர் ஏதாவது ஒன்று குறித்துப் பகைவர்போலானாலும் தமக்குள் இருக்கும் அன்பை விடமாட்டார்கள் என்றபடி. தான்: அசை.

வேடன் கதை

பார்ப்பான் ஒருவன் ஓர் அரசனிடத்தில் ஒரு மாணிக்க மணியைப் பெற்று, அதைக் கையில் வைத்துக்கொண்டால் திருடர்கள் பிடுங்கிக்கொள்வார்களென்று நினைத்து வாயிற் போட்டு விழுங்கிவிட்டான். பின்பொருகாற் கக்கி எடுத்துக்கொள்ளலாமென்பது அவன் எண்ணம். இதை யறிந்த வேடன் ஒருவன், அந்தப் பார்ப்பான் தன் ஊருக்குப் போகும்பொழுது கூடவேபோய் நடுக் காட்டுவழியில் அவனை மடக்கி 'உன் வயிற்றிலிருக்கும் மாணிக்கத்தைக் கக்கு' என்றான். பார்ப்பான் 'மாணிக்கம் உன் வயிற்றில்தானே இருக்கிறது' என்று வேடனைக் கேட்டான்.

இவர்கள் இப்படிச் சண்டை போட்டுக் கொண்டு இருக்கும் பொழுது திருடர்கள் வந்து பார்ப்பானைப் பிடித்துக்கொண்டு மாணிக்கத்தைக் கக்கச் சொன்னார்கள். வேடன் அறிவுள்ளவன் ஆதலால், அவன் பகைவனானாலும் அந்தப் பார்ப்பானிடத்தில் அன்பும் இரக்கமுங் கொண்டு, அவன் உயிரைக் காப்பாற்ற எண்ணித் திருடர்களைப் பார்த்து, "ஐயா, நாங்கள் வேடிக்கைக் குப் பேசிக்கொண்டோம். வயிற்றிலா மாணிக்கம் இருக்கும்? வேண்டுமானால் என் வயிற்றைக் கீறிப் பாருங்கள்" என்றான். திருடர்கள் வேடன் வயிற்றைக் கீறிப் பார்த்து மாணிக்கம் இல்லாதது கண்டு, 'ஆ! இவனை வீணாகக் கொன்றுவிட்டோமே, இந்தப் பார்ப்பானையாவது விட்டுவிடுவோம்' என்றெண்ணி அவனை விட்டு விட்டார்கள். பார்ப்பான் உயிர்பிழைத்தான். பார்ப்பானுக்கு வேடன் முதலிற் பகைவனாயிருந்தாலும், அவன் அறிவுடையவனாதலால், 'அன்பு சேர் நட்பையே' கொண்டான்.

**குரங்கின் கதை**

அரசன் ஒருவன் தான் வளர்த்துவந்த குரங்கினிடத்திற், கத்தியைக் கொடுத்து, 'இங்கு யாரும் வராமற் பார்த்துக்கொள்' என்று சொல்லித் திட்டம் செய்துவிட்டுப் படுத்துக்கொண்டான். அவன் தூங்கும் பொழுது அவன் மேலே ஓர் ஈ வந்து உட்கார்ந்தது. அறிவில்லாத அக் குரங்கு பார்த்தது. அரசன் இந்த ஈயைக் கொல்லத்தான் கத்தியைக் கொடுத்தான் என்று நினைத்து அந்த ஈயைக் கொல்லப் போயிற்று. ஈ பறந்துவிட்டது. அரசன் இரு துண்டாக வெட்டுண்டான். அரசனுக்குக் குரங்கு நட்பானாலும் அறிவில்லாமையாற் பகைவன்போல் ஆகிவிட்டது. (3)

மேன்மதுர வாக்கால் விரும்புஞ் சகங்கடின
வன்மொழியி னாலிகழு மண்ணுலகம்—நன்மொழியை
ஓதுகுயி லேதங் குதவியது கர்த்தபந்தான்
ஏதபரா தஞ்செய்த தின்று.

(இ - ள்.) நன் மொழியை - (மெல்லிய குரலான) இனிய ஓசையை, ஓது - கூவுகின்ற, குயில் - குயிற் பறவை, எது உதவியது - என்ன கொடுத்து விட்டது, (இன்று. எதுவும் இல்லை) (அல்லது) கர்த்தபம் - அருவருக்கும்படி ஓசைபோடும் கழுதை, ஏது அபராதம் செய்தது-என்ன கெடுதி செய்துவிட்டது, இன்று -எதுவும் இல்லை; (அவ்வாறிருக்கக் குயிலைமட்டும் உலகம் விரும்புவதேன்? அதன் மெல்லிய, இனிய ஓசையினா லன்றோ? ஆகவே தான்), சகம் - உலகம், மென் - மெல்லிய, மதுர வாக்கால் - இன் சொல்லால்; விரும்பும் - யாரையும் விரும்பி மகிழ்கின்றது, மண்ணுலகம் - இன்சொல்லால் மகிழ்ந்த இவ்வுலகே, கடின -

கொடுமையான, வன்மொழியினல் - வலிய சொல்லால், இகழும் - (எவரையும்) அருவருத்துப் பேசுகின்றது.

(க - நு.) இனிமையாகவே பேசவேண்டும் என்பது.

ஓசையால் மென்மையுற்றுப் பொருளால் இனித்து ஒழுகும் சொல்லை 'மென்மதுர வாக்கு' என்ருர். அவ்வாறே அவற்ருல் உரத்துங் கைத்தும் எழும் மொழியைக் 'கடின வன்மொழி' என்ருர். குயிலுங் கழுதையும் ஏதும் நன்மையாவது தீமையாவது செய்யாதிருக்கும்பொழுதே, அவ்விரண்டினுள் ஒன்றினிடத்தில் விருப்பமும் மற்ருென்றினிடத்தில் வெறுப்பும் உலகத்துக்கு உண்டாவது, குயில் இன்னோசை தருவதாலும், கழுதை வல்லோசை தருவதாலுமே என்க. இன்சொல்லும் வன்சொல்லும் உலகத்துக்கு மகிழ்ச்சியும் அருவருப்புந் தரும் உண்மையை, "இன்சொலால் அன்றி இருநீர் வியனுலகம் வன்சொலால் என்றும் மகிழாதே" என்னும் அறிவுமொழியும் எடுத்துரைப்பது காண்க. இச்செய்யுளில் சகம் என்று முதலிற் பொதுவாகவும், பின்பு மண்ணுலகம் என்று சிறப்பாகவும் கூறினமையால், இன்சொலால் நல்லவருந் தீயவரும் உள்ள மேல் கீழான எல்லா உலகங்களும் மகிழ்வடையுமென்றும், தேவருலகம் வன்சொல்லால் மகிழாது நிற்குமேயன்றி அவ் வன்சொல்லையும் அவ் வன்சொல் பயப்பாரையும் இகழமாட்டாது; ஆனால் மண்ணுலகம் அங்ஙனம் வாளாவிராது. இகழ்தலைச் செய்யும் என்றும் அறிந்து கொள்ளப்படும்.

> "நாவின் நுனியில் நயமிருக்கிற் பூமாதும்
> நாவினிய நல்லோரும் நண்ணுவார்—நாவினுனி
> ஆம்கடின மாகில் அத்திருவுஞ் சேராள்முன்
> ஆங்கே வருமரண மாம்"

என்று இந்நூலிற் பின்னும் வருதல் அறிக. (4)

> பகைசேரு மெண்ணான்கு பற்கொண்டே நன்னா
> வகைசேர் சுவையருந்து மாபோல்—தொகைசேர்
> பகைவரிட மெய்யன்பு பாவித் தவராற்
> சுகமுறுத னல்லோர் தொழில்.

(இ - ள்.) நல் நா - நல்ல நாக்கு, பகை சேரும் - தனக்குப் பகையான, எண்ணான்கு பல் கொண்டே - முப்பத்திரண்டு பற்களைத் துணையாகக் கொண்டே, வகை சேர் சுவை - பலவகையான சுவைகளையும், அருந்துமா போல் - சுவைப்பதுபோல, தொகைசேர் பகைவரிடம் - பகைவர் பலரானும் அவர்களிடம், மெய் அன்பு - உண்மையான அன்பையே, பாவித்து - வைத்து,

அவரால் - அப் பகைவர்களால், சுகம் உறுதல் - பலவகையான இன்பங்களையும் அடைதல், நல்லோர் தொழில் - நல்லவர்களின் செயல்.

(க - து.) நல்லவர் பகைவரிடத்திலும் அன்பு கொள்வர்.

பற்கள் நாக்கைச் சில வேளைகளிற் கடித்துவிடுவதனால் அவை நாக்குக்குப் பகையாயின. (5)

காந்தனில் லாத கனங்குழலாள் பொற்பவமாஞ்
சாந்தகுண மில்லார் தவமவமாம்—ஏந்திழையே
அன்னையில்லாப் பிள்ளை யிருப்ப தவமவமே
துன்னெயிறில் லாரூண் சுவை.

(இ - ள்.) ஏந்து இழையே - மணிகளால் இழைக்கப்பட்ட நகைகளை எடுப்பாக அணிந்துள்ள பெண்ணே, காந்தன் இல்லாத - கணவன் இல்லாத, கனம் குழலாள் - பளுவான கூந்தலை உடைய பெண்மகளின், பொற்பு - அழகு, அவம் ஆம் - வீண் ஆகும்; அன்னை யில்லா - தாயில்லாத, பிள்ளை - குழந்தை, இருப்பது - இன்னொருவரை எதிர்பார்த்துப் பிழைத்திருப்பது, அவம் (ஆம்) - வீண் ஆகும்; துன் - நெருக்கமான, எயிறு - பற்கள், இல்லார் - இல்லாதவர்கள் உண்ணும், ஊண்சுவை - உணவின் சுவை, அவம் ஆம் - வீண் ஆகும்; (அதுபோல), சாந்த குணம் - பொறுமையான பண்பு, இல்லார் - இல்லாத பேரறிஞரின், தவம் - இறை வழிபாடு, அவம் ஆம் - வீணாகும்; அவ் வழிபாடு செய்தும் பயனில்லை என்றபடி.

(க - து.) பொறுமையில்லாது தவமுயற்சியில் நின்று கடவுள் வணக்கஞ் செய்வதில் ஏதும் பயனில்லை.

இச் செய்யுளில் 'சாந்தகுணமில்லார் தவம் அவமாம்' என்பது உவமேயம். மற்ற மூன்று கருத்துக்களும் உவமைகள். இவ்வாறு உவமைகளையும் கருத்தொடு படுத்துக் கூறுதல் புலனெறி வழக்கு; இம்முறை பின்னும் வரும்; இந்நூல் 28, 29 ஆவது செய்யுட்களில் காண்க.

" கல்லாத மாந்தர்க்குக் கற்றுணர்ந்தார் சொற்கூற்றம்
அல்லாத மாந்தர்க் கறம்கூற்றம்—மெல்லிய
வாழைக்குத் தானீன்ற காய்கூற்றம் கூற்றமே
இல்லிற் கிசைந்தொழுகாப் பெண் "

என்னும் மூதுரைச் செய்யுளும் இவ் வழக்கினைத் தெளியக் காட்டும். இன்னும் அடுத்த பாட்டு முற்றும் உவமையாகவே வருவதுங் காண்க.

பொற்பு என்றது இங்கு இளமையைக் குறித்தது. பிள்ளை-பாலுண்ணும் பச்சைக் குழந்தை: ஏனென்றால், அத்தகைய தொன்றே தன் தாயின் உதவியின்றி உயிர்வாழ முடியாததும், ஒருகால் தப்பிப் பிழைத்து உயிர் வாழினும், நோயுந் துன்பமு மின்றி வாழ்தல் அரிதாவதுமாம். நெருங்கிய பற்கள் இல்லாதவர் கள் வாயிலிடும் பண்டத்தை முழுதும் மெல்ல முடியாமல் அப் படியே விழுங்கிவிடுவார்கள். அங்ஙனம் அரைகுறையாய் மென்று விழுங்குவதனால், நன்றாய் மென்று சுவைப்பதாலாம் இன்பத்தை அவர்கள் பெறமுடியாதுபோம்; அம்முடியாமையே இங்குக் குறிக் கப்பட்டது. ஆம் என்னும் சொல்லை மற்றவற்றிற்குங் கூட்டுக. (6)

வருத்தவளை வேயரசர் மாமுடியின் மேலாம்
வருத்த வளையாத மூங்கில்—தரித்திரமாய்
வேழம்பர் கைப்புகுந்து மேதினியெல் லாந்திரிந்து
தாழுமவர் தம்மடிக்கீழ்த் தான்.

(இ - ள்.) வருத்த-தன்னைப் பிறர் வளைத்து வருத்தப்படுத்த, வளை - மிக வருந்த வளைந்த, வேய் - மூங்கில் தண்டு, அரசர் - உலகத்துக்கே தலைவரான அரசரின், மா - பெருமை பெற்ற, முடியின்-தலைமுடியின், மேல் ஆம் - மேலாய் இருக்கும்; வருத்த- அங்ஙனம் வளைத்து வருத்த, வளையாத - வளையாது நிமிர்ந்தே நின்ற, மூங்கில் - மூங்கிற்கொம்பு, தரித்திரமாய்-இழிமையுடைய தாய், வேழம்பர் - கழைக் கூத்தாடிகளின், கைப்புகுந்து - கையி லகப்பட்டு, மேதினி எல்லாம் - உலகமெல்லாம், திரிந்து-சுற்றிச் சுற்றி அலைந்து, அவர் தம் - அவருடைய, அடிக்கீழ்-காலின்கீழே, தாழும் - கிடந்து இழிவடையும். தான் : அசை.

(க - ரு.) இளமையிலேயே வருந்திக் கல்விகற்றுக்கொண் டால் பெருமையும், கல்லாவிட்டால் சிறுமையும் வரும்.

இச் செய்யுள், முழுதும் உவமையாக உள்ளது. உவமேயம் இதன்கண் எஞ்சி நின்றது. அஃது, இளமையிலேயே தந்தையா ரும் ஆசிரியரும் வற்புறுத்திப் படிக்கவைக்க, அப்பொழுது நன் றாய் வருந்திப் படித்துக்கொண்ட பிள்ளைகள் பிற்காலத்தில் அரசனும் போற்றும்படி பெருமையடைவார்கள். அப்பொழுது உடம்பு வளைந்து படித்துக்கொள்ள மாட்டாத பிள்ளைகள் பின்பு குடிக்கக் கஞ்சியும் கட்டத் துணியும் அற்று, ஊர் ஊராய் அலைந்து திரிந்து இழிமக்களின் வேலைகளைச் செய்துகொண்டு அவர் காலால் உதை பட்டுக் கிடப்பர் என்பது.

வளைந்த மூங்கில் அரசர் முடியில் இருப்பதை, அவர் ஏறி வரும் பல்லக்கின்மேற் காண்க. வளையாது கூத்தர் கைப்பட்ட மூங்கிலுக்கு வந்த வறுமையாவது, அழகு செய்யப்படாது, வெயிலாலுலர்ந்து மழையால் நனைந்து தரையிற் கிடந்து கட்டுண்டு கிடப்பது முதலியன. கூத்தாடியின் கைப்பட்ட மூங்கில் வேறு நல்வினைக்குப் பயன்படாது போதலின், கைப்புகுந்து என்றார். மூங்கிலுக்கு வளைதல் அது குருத்தாயிருக்குங் காலத்திலாதலால், உவமேயத்திலும் இளமை என்று வருவித்துக் கொள்ளப் பட்டது. (7)

நொய்தாந் திரணத்தி னொய்தாகும் வெண்பஞ்சின்
நொய்தா மிரப்போ னுவலுங்கால்—நொய்யசிறு
பஞ்சுதனி னொய்யானைப் பற்றாதோ காற்றணுக
அஞ்சுமவன் கேட்ப தறிந்து.

(இ - ள்.) நுவலுங்கால்-சொல்லும்பொழுது, இரப்போன்-பிச்சையெடுப்பவன், நொய்து ஆம் - சிறியதான, திரணத்தின்-துரும்பைக்காட்டிலும், நொய்து ஆகும் வெண் பஞ்சின்-பின்னும் இலேசான வெண் பஞ்சைவிட, நொய்து ஆம்-மிகவும் எளியவன் ஆவான், (அங்ஙனம்) நொய்ய சிறு பஞ்சுதனின்-மிகவும் நொய்தானசிறுபஞ்சைவிட, நொய்யானை-எளியவனான அவ்விரப்பானை, காற்று-வீசியடிக்குங் காற்று, பற்றாதோ - பற்றி அடித்துக் கொண்டு போகாதோ (எனின்), காற்றும் - அக் காற்றுக்கூட, அவன் கேட்பது அறிந்து - அவ்விரப்போன் ஒவ்வொருவரையும் கேட்டுக்கொண்டிருத்தலைத் தெரிந்துகொண்டு, அணுக அஞ்சும்-(தன்னையும் ஏதாவது கேட்டுவிடுவானோ என்று அவனிடம்) நெருங்குவதற்கே அச்சப்படும்.

(க - து.) பிச்சையெடுப்பது மிகவும் தாழ்ந்தது.

இதனால், இரப்பவனின் எளிமையும் ஏழைமையுங் கூறப்படுகின்றன. துரும்பையும் பஞ்சையும்விட இரப்போன் எளியவன் என்றபடி. 'வெண்பஞ்சின் நொய்தாம் இரப்போன்' என்று கூறியதன் மேலும், 'நொய்ய சிறு பஞ்சுதனின் நொய்யானை' என்று கூறியதும், 'காற்றும் அணுக அஞ்சும் அவன் கேட்ப தறிந்து' என்றதும் முறையே அவனுடைய ஏழைமை மிகுதியையும் இழிவு மிகுதியையும் விளக்கின. அவன் யாது கேட்டுவிடுவானோ என்று காற்றே அஞ்சுமானால், மக்கள் அஞ்சுதலைப் பற்றிக் கூறல்வேண்டா. எனவே, எல்லாரும் இவ்வாறு அஞ்சி ஒதுங்கி விடுவார்களானால், அவ் விரப்போன் துணையற்றுத் தவிப்பான், அப்போது அவன் எளியனாதல் புலனாகின்றமை காண்க. (8)

ஒருபோது யோகியே யோண்டளிர்க்கை மாதே
இருபோது போகியே யென்ப—திரிபோது
ரோகியே நான்குபோ துண்பா னுடல்விட்டுப்
போகியே என்று புகல்.

(இ - ள்.) ஒள்-ஒளியுள்ள, தளிர் இலைக்கொழுந்துபோலும், கை-கையையுடைய, மாதே-அழகுடைய பெண்ணே, யோகியே-தவம் செய்பவன், ஒருபோது (உண்பான்) - ஒருநாளில் ஒரு பொழுது உண்பான்; போகியே - உலக இன்பங்களை நுகர்ந்து கொண்டிருப்பவன், இருபோது (உண்பான்)-ஒருநாளில் இரண்டு முறை உண்பான்; ரோகியே - நோயாளியே, திரிபோது (உண்பான்)-ஒருநாளில் மூன்று வேளைகள் உண்பான்; உடல் விட்டுப் போகியே - உடலைவிட்டு இறந்து போகக்கூடியவனே, நான்கு போது உண்பான் - ஒருநாளில் நான்கு தடவைகள் உண்பவனுவான், என்று புகல் - என்று சொல்.

(க - து) ஒரு வேளை இருவேளைக்கு மேல் மூன்று வேளையும் நான்கு வேளையுமாக உண்ணலாகாது.

யோகியே போகியே என்பவற்றின் இரண்டு ஏகாரமும் அசைகள்; ரோகியே போகியே என்பவற்றின் ஏகாரங்கள் தேற்றம். உண்பான் என்னும் வினையாலணையும் பெயரை மற்றவற்றோடும் ஒட்டுக. என்று என்பதனோடு உம்மை கூட்டி ரோகியே யென்றும், போகியேயென்றும் எனப் பொருளுரைத்தலு மொன்று.

இச் செய்யுளின் மூன்று போதும் நான்கு போதும் உண்ணல் கூடாதென்று மறுத்து, ஒருபோதுண்பதைத் துறவறத்தார்க்கும் இருபோதுண்டலை இல்லறத்தார்க்குமாக ஆசிரியர் எடுத்துக் காட்டினுர். ஏனென்றால், முன்னிரண்டையும் பின்னிரண்டினின்றும் 'என்ப' என்னும் இடைகொடுத்துப் பிரித்தாராதலான் என்க. (9)

கண்ணிரண்டே யாவர்க்குங் கற்றோர்க்கு மூன்றுவிழி
எண்ணும்விழி யேழாகு மீவோர்க்கு—நண்ணும்
அநந்தந் தவத்தா லருள்ஞானம் பெற்றோர்க்
கநந்தம் விழியென் றறி.

(இ - ள்.) யாவருக்கும் கண் இரண்டே (ஆகும்)-மக்களெல்லோருக்கும் இரண்டு கண்களே உள்ளன; கற்றோர்க்கு மூன்று விழி (ஆகும்) - படித்தவர்களுக்கு மூன்று கண்கள் இருக்கின்றன, ஈவோர்க்கு-கொடுப்பவர்களுக்கு, எண்ணும் - மதிக்கத் தகுந்த, விழி ஏழு ஆகும் - கண்கள் ஏழாகும்; நண்ணும் - வந்து கூடுகின்ற, அநந்தம் - முடிவில்லாத, தவத்தால் - நல்வினையால்

(புண்ணியத்தால்), அருள் ஞானம் - அருள் வழிப்பட்ட மெய்யறிவைப், பெற்றோர்க்கு - பெற்ற பெரியோர்களுக்கு, அநந்தம் விழியாகும் - கணக்கில்லாத கண்கள் உண்டு, என்று அறி-என்று நீ தெரிந்துகொள்.

(க-து.) பொதுமக்களைவிடக் கற்றவர்களும் வள்ளல்களும் தவத்தோரும் முறையே மேலானவர்களென்பது.

'ஏழாகும்': ஆகும் என்பதை மற்றவற்றிற்கும் ஒட்டுக. முதல் அநந்தம் அழியாமைப் பொருளையும், இரண்டாம் அநந்தம் அளவின்மைப் பொருளையும் உடையன. கண்ணிரண்டே என்பதன் ஏகாரம் தேற்றப் பொருளது. யாவர்க்கும் என்றது, மக்களினுங் கீழ்ப்பட்ட விலங்கு, புள் முதலியவைகளையும் உளளடக்கி; அவற்றிற்கும் இரண்டு கண்களே உளவாதலால், மதிக்கத்தக்க கண்கள் வேறின்றி அவ் விரண்டையே உடைய மக்கள், அவ்விலங்கு முதலியவற்றினுஞ் சிறந்தாரென்பது சொல்லாமை தெளிவித்தற் பொருட்டு. எண்ணும் என்பதைக் கற்றோர் விழிக்கும், அருள்ஞானம் பெற்றோர் விழிக்கும் அடையாக்கிக்கொள்க. எண்ணும் விழியாவது - பெரியோரால் மதிக்கத் தக்க கண்கள்; ஊனக்கண்ணை விட அறிவுக்கண்ணே சிறந்ததாதலால் 'எண்ணும்விழி' என்றார். கல்வி முதலிய வேறு கண்கள் இருக்கும்பொழுது இழிவான அவர்தம் ஊனக்கண்ணும் சிறந்தெடுத்துப் பாராட்டப் படுகின்றமையின், கற்றவர் முதலானவர்களுக்கு அறிவுக்கண்ணோடு அவ் வூனக்கண்கள் இரண்டையும் ஒருசேரச் சேர்த்து மூன்று என்று கூறினர். கொடுக்குங் கையிலுள்ள நகக்கண்கள் ஐந்தோடு ஊனக்கண்கள் இரண்டுஞ் சேர்க்க, ஈவோர்க்குக் கண்கள் ஏழாகுமென்று கொள்க. ஊனக்கண், கல்வி முதலிய வேறு கண்கள் இல்லாதபொழுது இழிக்கப் படுதலும், அவை இருக்கும்பொழுது மதிக்கப்படுதலுமான இவ் வுண்மையை,

> "கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
> புண்ணுடையர் கல்லா தவர்"

என்னும் திருக்குறளிலும்,

> "மைதவழ் வெற்பன் மணவணி காணமற்
> கையாற் புதைபெறூஉங் கண்களுங் கண்களோ"

என்னுங் கலித்தொகை யடிகளிலும் (39) காண்க. (10)

> உற்றபெருஞ் சுற்ற முறநன் மனைவியுடன்
> பற்றிமிக வாழ்க பசுவின்வால்—பற்றி
> நதிகடத்த லன்றியே நாயின்வால் பற்றி
> நதிகடத்த லுண்டோ நவில்.

(இ - ள்.) பசுவின் வால்-பசுமாட்டின் வாலை, பற்றி - பிடித்துக்கொண்டு, நதி - நீர் நிரம்பிய ஆற்றுவெள்ளத்தை, கடத்தலன்றி - கடப்பதல்லாமல், நாயின் வால் - ஒரு சிறு நாயின் வாலை, பற்றி - பிடித்துக்கொண்டு, நதி - ஆற்றை, கடத்தல் - கடந்து செல்லல், உண்டோ-முடியுமோ, நவில்-நீ சொல்; (அதுபோல), உற்ற - பொருந்திய, பெருஞ்சுற்றம் - பெருமையான உறவினர், சூழ - தன்னைச் சூழ்ந்திருப்ப, நன் மனைவியுடன் - ஒருவன் தனக்கு வாய்த்த நல்ல மனைவியோடு, பற்றி-அன்புகொண்டு, மிக-நன்றாக, வாழ்க - வாழக்கடவன்.

(க - து.) நல்ல இல்லாளோடு கூடி இல்வாழ்க்கையை நடத்தல் வேண்டும்.

நல்ல சுற்றத்தார் வினைவகையால் நேர்வராதலின், 'உற்ற பெருஞ் சுற்றம்' என்றார். அஃதாவது நாமே இப்பிறவி முயற்சியாற் சேர்த்துக்கொள்ளல் இயலாதென்பது. பெருஞ் சுற்றமென்றது, நல்ல தன்மைகளிற் பெருமை மிக்க உறவினரை; ஏனென்றால் அவருடைய பண்புகளே வாழ்க்கையாற்றைக் கடத்தற்கு உதவுமாகலின், வாழ்க்கையை இப்பாட்டில் ஆறாக உருவகப்படுத்தனர்; பல்வகையான ஞான வளங்களையெல்லாந் தொகுத்துக்கொண்டு பலர்க்கும் பயனாகி இறுதியில் இறைவன் றன்பேரருட் கடலிற் படிதலின் என்க. அன்றியும், நினைத்தாலும் நெஞ்சம் நீராம்படி பலப்பல இடுக்கண்களை இவ்வுலக வாழ்க்கை உடையதுபோலத் தன்கண் இறங்குவாரைத் துன்பத்துங்குள்ளாக்கிக் கடைசியிற் கொல்விக்கவும் தக்க அலைகளும் சுழிகளும் அவற்றின் விரைவுகளும் பிறவும் ஆறு உடைத்தாதலுங் கருதுக. இவ்வகையான நடுக்கமுடைய வாழ்க்கையைக் கடந்து மேம்படுதற்கு உதவியாகப் பற்றத்தக்க நல்ல துணை நன்மனைவியேயாவாள். மனைவியாவாளே தன் கணவனுடைய எல்லாச் செய்திகளையும் மிக நெருங்கிப் பழகி யறிந்து அவ்வறிதலால் அவன் இயல்புக்கும் ஆற்றலுக்கும் ஏற்ப இடனறிந்து இடுக்கண் களைந்து துணைபுரிவள். மனைவியும் நெஞ்சொத்தவளாயிருத்தல் வேண்டுமென்பார், 'நன்மனைவி' யென்று அடையொடு சேர்த்துக்கூறினார். கணவனும் மனைவியும் தமக்குள்ள ஒருமைப்பாட்டினாலேயே எடுத்த வேலையை முடிக்கப்பெறுதல் வேண்டுமென்பது,

" காதன் மனையாளுங் காதலனும் மாறின்றித்
தீதி லொருகருமம் செய்பவே"

என்னும் நன்னெறிச் செய்யுளாலுந் தெளியப்படும். மனைவி கணவனைப் பாதுகாக்குங் கடமையுடையவள் என்பது,

" தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்"

என்னுந் திருக்குறளிற் கண்டுகொள்க.

பொருள் முதலிய வேறு வகைகளாற் பற்றின் அப் பொருள் முதலியவை குறைவுபட்டும் இல்லாதும் போகும்வழிக் கணவன் மனைவியர்க்குள் ஒற்றுமை கெட்டுத் துன்பம் விளையுமாதலின், அப்பொருள் முதலியவை இல்லாதபொழுதும் ஒற்றுமை நின்று இன்பந் தோன்றுதற்கு அன்பாற் பற்றுகவென்பார், 'பற்றி' என்றார். மனைவியை உடன்பற்றி என்ற பொருள் கூறுவதும் ஒன்று. மிகவாழ்க என்றது, அன்பால் நெஞ்சமொத்த மனைவியொடு கூடிப் பெறத்தக்க எல்லா நலங்களையும் மிகவும் பெற்று நன்றாக வாழ்க என்பதற்கு. பசுவின்வால் பற்றி நதி கடத்தற்கு நன்மனைவியைப் பற்றி வாழ்தலே உவமேயமாதலின், நாயின்வால் பற்றி ஆறு கடத்தற்குத் தீய மனைவியைப் பற்றி வாழ்தலை உவமேயமாகக் கொள்க. ஆற்றைக் கடத்தற்குச் சிறிதும் உதவியாகாது அவ் வாற்றில் வீழ்ந்து இறத்தற்கே நாய் கருவியாதல் போல, நெஞ்சொத்தில்லாத தீய மனைவியும் அன்பற்ற பொருட் பெண்டிரும் பிறரும் வாழ்க்கையைச் செம்மைப்படுத்தும் வீடு பேற்றின்பந் தருதற்கு உதவியாகாது, அவ் வாழ்க்கையிற் பல இன்னல்களை விளைத்து இறப்பித்தற்கே இடஞ் செய்வர்.

" ஏமாந்த போழ்தின் இனியார்போன்று இன்னாராய்த்
தாமார்ந்த போதே தகர்க்கோடா—மானேக்கின்
தம்நெறிப் பெண்டிர் தடமுலை சேராரே
செந்நெறிச் சேர்துமென் பார்" (பொதுமகளிர் 8)

" செம்மையொன்று இன்றிச் சிறியார் இனத்தராய்க்
கொம்மை விரிமுலையாள் தோள்மரீஇ—உம்மை
வலியால் பிறர்மனைமேல் சென்றாரே இம்மை
அலியாகி ஆடிஉண் பார்" (பிறர்மனை நயவாமை, 5)

என்பன நாலடியார். (11)

ஆசைக் கடியா னகிலலோ கத்தினுக்கும்
ஆசற்ற நல்லடியா ளுவானே—ஆசை
தனையடிமை கொண்டவனே தப்பா துலகந்
தனையடிமை கொண்டவனே தான்.

(இ - ள்.) ஆசைக்கு - அவாவுக்கு, அடியான் - அடிமைப் பட்டுக் கிடப்பவன், அகில லோகத்தனுக்கும் - எல்லா உலகங் களுக்கும், ஆசு-குற்றம், அற்ற-இல்லாத, நல் - நல்ல, அடியான்

ஆவானே - அடிமையாவான், ஆசைதனை - அவாவை, அடிமை கொண்டவனே - தனக்கு அடிமையாகக் கொண்டவனே, (அகில) உலகந்தனை-எல்லா உலகத்தையும், தப்பாது-தவறாமல், அடிமை கொண்டவனே (ஆவான்) - அடிமைப்படுத்திக் கொள்வான்.

(க - து.) அவா இல்லாதவன் உலகத்தை வெல்வான்.

ஏகாரங்கள் மூன்றிலும் நடுவின்றது பிரிவிலை. மற்ற இரண்டும், தான் என்பதும் அசைகள். அகிலம் ஆவான் என்பவற்றைப் பின்னுங் கொள்க. ஆசைக்கு அடியான் என்றால், ஆசை போன வழியெல்லாந் தான் அடங்கி நடப்பவன் என்பது. ஆசை இறுதியில் துன்பத்தையே தருமாகலால், அதன் வழியே சென்றவன் அளவில்லாத துன்பங்களாற் சூழப்பட்டிருப்பான். துன்பம் நேர்ந்து மிகுந்தமையின் அதனை நீக்கிக் கொள்வதற்கு உலகத்தாரின் உதவியை நாடி அவரெல்லார்க்கும் அடிமையாய்க் கிடப்பனாதலின், "ஆசைக்கு அடியான் அகிலலோகத்தினுக்கும் அடியான்" என்றார். அவனை 'ஆசற்ற நல்ல அடியான்' என்றது இழிப்புரை. அல்லது உள்ளபடியே பிறரை எதிர்பார்த்துக் கிடக்கும் அடியான் என்றுமாம். ஆசைதனை அடிமை கொண்டவன் என்றால், ஆசைவழித் தான் நடவாமல், தன்கண் ஆசையை எழவொட்டாதபடி அதை அடக்கி நிற்பவன் என்பது. அப்படிப்பட்டவனுக்கு இன்பமே வரும். அவ் வின்பத்தைப் பெற உலகத்தவரெல்லாரும் இவனை நோக்கி அடிமை கிடப்பராதலால், 'ஆசைதனை அடிமை கொண்டவன் தப்பாது உலகந்தனை அடிமை கொண்டவன்' என்றார். பிறரை எதிர்பாராமையின் உலகத்தார்க்கு இவன் அடிமையாகான். உலகம் என்பது உலகத்திலுள்ள உயிர்களை. இன்பத்தை எல்லா உயிர்களுந் தப்பாது பெற விரும்புதலால், அவாக்கெட்டு இன்பமார்ந்து இருப்பவனுந் தப்பாது உலகத்தினை அடிமை கொண்டவனுவான். அவா துன்பந் தரும் என்பதும், அவாவின்மை இன்பந்தருமென்பதும்,

"அவாஇல்லார்க்கு இல்லாகுந் துன்பம்அஃது உண்டேல்
தவாஅது மேன்மேல் வரும்"

"இன்பம் இடையறாது ஈண்டும் அவாஎன்னும்
துன்பத்துள் துன்பம் கெடின்"

என்னும் திருக்குறள் கொண்டு அறிந்துகொள்க. (12)

ஆனந் தணர்மகளி ரன்பாங் குழந்தைவதை
மானந் தரும்பிசி வார்த்தையிவை—மேனிரையே
கூறவரு பாவங் குறையாதோவ் வொன்றுக்கு
நூறதிக மேன்றே நவல்.

(இ - ள்.) ஆன் (வதை) - ஆக் கொலை, அந்தணர் (வதை) - பார்ப்பார் கொலை, மகளிர் (வதை) - பெண் கொலை, அன்பாம் குழந்தை வதை - அன்பு வடிவான குழந்தைகளின் கொலை, மானம் தரும் பிசி வார்த்தை-இழிவைக் கொடுக்கும் பொய்யுரை, இவை - இவ்வைந்து தீமைகளையும், மேல் நிரையே கூற - மேல் வரிசையாகச் சொல்ல ; வரும்-அவற்றால் வரும், பாவம்-தீவினை, ஒவ்வொன்றுக்கும் - ஒன்றுக்கொன்று, குறையாது - குறையாமல், நூறு-நூறு பங்கு, அதிகம்-மிகுதியாம், என்றே நுவல்-என்றே சொல்லு.

(க - ரு.) ஆன் அந்தணர் மகளிர் குழந்தை முதலியவர்கட்குத் தீமை செய்வதும், பொய் சொல்வதுங் கூடாது.

ஏ : தேற்றம். வதை என்பதை மற்றவற்றோடும் ஒட்டுக. பொய்யையும் மற்றத் தீமைகளையும் வேறு பிரித்தற்கு வதை என்பதை இறுதியிற் கொடுத்தார். பெற்றோர் செலுத்தும் அன்பெல்லாந் தங்குதற்குத் தக்க இடமாயுள்ளது குழந்தையே யாதலால், 'அன்பாங் குழந்தை' என்றார். பொதுவாகக் குழந்தைகளைக் கொல்லுதல் தவறென்பதோடு, அதனினுஞ் சிறப்பாக ஆன், அந்தணர், மகளிர் என்பாரையும் அவர்தங் குழந்தைகளான ஆன் கன்றுகள், பார்ப்பனப் பிள்ளைகள், பெண் குழந்தைகள், என்பவைகளையும் கொல்லுதல் பெரிதும் ஏதமாமென்று குறித்தற்கு அன்பாம் என்னும் அடைகொடுத்தா ரென்றலுமொன்று. ஆன் அந்தணர் மகளிர் என்னும் சொற்கள் முறையே கன்றுடை ஆனையும் அந்தண்மையுள்ள பார்ப்பனரையும், கற்புடைப் பெண்டிரையுஞ் சிறப்பாக உணர்த்தும். வதை என்பது கொலையையே யன்றிச் சிறிது துன்பஞ் செய்தலையுங் குறிக்குமாதலின், அவர்க்கு அதுதானுஞ் செய்யலாகாதென்க. துன புறுத்துதற்குங் கொலை செய்தற்கும் இவர் தகாதவர் என்பது,

> "பாய்எரி இந்தப் பதியூட்டப் பண்டேஓர்
> ஏவல் உடையேனால் யார்பிழைப்பார் ஈங்கென்னப்
> பார்ப்பார் அறவோர் பசுப்பத் தினிப்பெண்டிர்
> மூத்தோர் குழவி எனும் இவரைக் கைவிட்டுத்
> தீத்திறத்தார் பக்கமே சேர்க என்று காய்த்திய
> பொற்றொடி ஏவப் புகைஅழல் மண்டிற்றே
> நல்தேரான் கூடல் நகர்" (வஞ்சினமாலை. 51-57)

என்னுஞ் சிலப்பதிகார அடிகளாலும் விளங்கும். மானம் என்றது இங்கு இழிவுப்பொருளில் வந்தது. (13)

பெற்றமையு மென்னுப் பெரியோரும் பெற்றபொருள்
மற்றமையு மென்றே மகிழ்வேந்து—முற்றியநன்
மானமிலா இல்லாளு மானமுறு வேசியரும்
ஈன முறுவா ரிவர்.

(இ - ள்.) பெற்று - பொருளைப் பெற்றிருந்து, அமையும் - இது போதும், என்னு - என்று நெஞ்சம் மகிழாத, பெரியோரும் - சான்றோர் எனப்படுவாரும், பெற்ற பொருள் - தாம் அடைந்த பொருளே, அமையும் என்று - போதுமென்று, மகிழ் - நெஞ்சம் மகிழும், வேந்தும் - அரசர்களும், முற்றிய - மிகுந்த, நல் - நல்ல, மானம் - நாணம், இலா - இல்லாத, இல்லாளும் - மனைவியும், மானம் - அந்த நாணத்தை, உறும் - பெறுகின்ற, வேசியரும் - பொதுமகளிரும், இவர் - ஆக இந் நால்வரும், ஈனம் உறுவார் - தாழ்வு அடைவார்.

(க - து.) பெற்ற பொருளிலே பெரியோர்கள் அமைதி பெருமையிலும், அதனை அரசன் வெறுப்பதிலும், இல்லாள் நாணமுருமையிலும், வேசிகள் அதனைக் கொள்வதிலும் அவர்க்குத் தாழ்வே யன்றி உயர்வில்லை.

பொருள் வேண்டக்கூடாத பெரியோர் அதனை வேண்டினுற் குற்றமாதல் போலப், பொருளை மேன்மேலும் விரும்பிச் சேகரிக்க வேண்டிய அரசன் அதனை வேண்டாது வெறுத்தலுங் குற்றமாயிற்று; அதைப்போலவே, இல்லாளுக்கும் வேசியர்க்கும் நாணத்தைக் கொள்க இல்லாளுக்கும் வேசியர்க்கும் நாணம் வேண்டியும் வேண்டாதும் நிற்றல் போலப் பெரியோர்க்கும் அரசர்க்கும் பொருள் வேண்டாதும் வேண்டியும் நிற்கின்றதென்று இவற்றை உவமை கொள்ளுதலும் ஒன்று. அதற்குப் பெரியோர் அரசர் இல்லாள் வேசியர் என்பன எதிர் நிரனிறையாகும்.

பெற்றபொருள் போதுமென்று செங்கோலரசன் அமைதியுறுவனுயின், மிகுந்த பொருளால் உலகுக்குச் செய்யவேண்டிய உயர்ந்த அறச்செயல்களை யெல்லாம் அவன் செய்யமாட்டாதவனுய்ப் போவனுதலாலும், மிகுந்த பொருள் இல்லாமையாற் பகையரசர்களால் வெல்லப்பட்டுத் தான் எண்ணிய எண்ணப்படி நாட்டுக்கு நலஞ் செய்யமாட்டாது தன் நாட்டவரைப் பிறர் கையில் விடுத்து அவர்க்கு இன்னலிழைத்தவன் ஆவனுதலாலும் அவனுக்குத் தாழ்வு நேர்கின்றமையின், பெற்ற பொருள் போதுமென்று அரசன் அமைதியுறுதல் அவனுக்குக் குற்றமாயிற்று. அவ்வாறே, முதலிலேயே நாணமிறந்து பலரையும் மருவிக் கற்பிழந்துவிட்ட வேசி, மீண்டும் நாணமுடையவளாய்த் தன்னைப்

பாதுகாத்துக் கொள்ளுதலால் அவட்கு அத்துணை உயர்வு வராமையானும், முதலிலேயே நாணிழந்து பிறர் மெய் தொட்டுப் பொருள் தேடி உயிர் வாழ்ந்துவந்தவள், இனித் தன்னை எவரும் மணந்து தனி வாழ்க்கையில் நிறுத்திப் பொருள் தாராராதலின், தன் மக்களோடு வறுமையிற் கிடந்து உழலுதலாகிய தாழ்வே வருகின்றமையானும், வேசியர் நாணமுறுதலிற் ருழ்வு வருதல் காண்க.

இனிப் பெரியார் பொருள் விழைதலும், இல்லாள் நாணிழத்தலுந் தாழ்வென்பது வெளிப்படை. எவ்வளவு இருத்தல் வேண்டுமோ அவ்வளவும் இல்லாளுக்கு இருத்தல் வேண்டுமென்பார், 'முற்றிய மான' மென்றும், அவட்கும் அவளோடு சேர்ந்த அவள் கொழுநனுக்கும் அது பலவகையிலும் நலமே விளைத்தலால், 'நன் மான' மென்றும் அடைமொழிகள் தரப்பட்டன. மற்று : அசை. (14)

கற்ருேர் கனமறிவர் கற்ருேரே கற்றறியா
மற்ருே ரறியார் வருத்தமுறப்—பெற்றறியா
வந்தி பரிவாய் மகவைப் பெறுந்துயரம்
நோந்தறிகு வாளோ நுவல்.

(இ - ள்.) வருத்தம் உற - துன்பப்பட்டு, பெற்று அறியா - (பிள்ளையைப்) பெற்றறியாத, வந்தி-மலடி, மகவை - குழந்தையை, பெறுந் துயரம்-பெற்றெடுக்குந் துன்பத்தை, நொந்து - நோவுற்று, பரிவாய் - இரக்கமாய், அறிகுவாளோ - தெரிந்து கொள்வாளோ, நுவல்-நீ சொல், (அவள் தெரிந்துகொள்ளமாட்டாள். (அதுபோல,) கற்ருேர்-வருந்திப் படித்தவர்களின், கனம்-பெருமையை, கற்று அறியா-அங்ஙனம் வருந்திப் படித்தறியாத, மற்ருேர் - மூடர்கள், அறியார் - தெரிந்துகொள்ளமாட்டார்கள். கற்ருேரே அறிவர் - அவர்கள் பெருமையைப் படித்தவர்களே அறிவார்கள்.

(க - து.) படித்தவர் பெருமையைப் படித்தவரே அறிவார்.

அறிகுவாளோ என்பதில் கு : எழுத்துப்பேறு. பரிவாய் என்றது, பிள்ளையைப் பெறுந் துன்பத்தோடு அக் கால் அப் பிள்ளைமாட்டு உண்டாகும் ஓர் அன்பை. அந்த அன்பையும் மலடி அறியாள் என்றபடி.

"பெற்றவட்கே தெரியும் அந்த வருத்தம் பிள்ளை
பெறுப்பேதை அறிவாளோ"

என்று தாயுமானவரும் இவ்வாறே கூறுவர். (15)

செய்யு மொருகருமந் தேர்ந்து புரிவதன்றிச்
செய்யின் மனத்தாபஞ் சேருமே—செய்யவொரு
நற்குடியைக் காத்த நகுலனைமுன் கொன்றமறைப்
பொற்கொடியைச் சேர்துயரம் போல்.

(இ - ள்.) செய்யும் - செய்யத்தக்க, ஒரு கருமம் - ஒரு வேலையை, தேர்ந்து - ஆராய்ந்து பார்த்து, புரிவதன்றி - செய்வதல்லாமல், செய்யின் - நினைந்துபாராது செய்வதனால், முன்-முன்னொருநாள், செய்ய - செம்மையான, ஒரு நல் குடியை - ஒரு நல்ல குழந்தையை, காத்த-பாதுகாத்துக் கொண்டிருந்த, நகுலனை-கீரிப்பிள்ளையை, கொன்ற(ஆராயாது) கொன்றுவிட்ட, மறைப்பொற்கொடியை-பார்ப்பனப் பெண்ணை, சேர்-சூழ்ந்த, துயரம்போல்-துன்பம்போல, மனத்தாபம்-துன்பம், சேரும் - உண்டாகும்.

(க - து.) எதனையும் முன்னாராய்ந்து செய்தல் வேண்டும்.

தேர்ந்து புரிவதாவது, தான் எடுத்துக்கொண்ட வேலை தன் ஆற்றலுக்கும், காலம் இடம் துணை முதலியவற்றிற்கும் பொருந்துமாவென்று முன்னரே நினைந்துபார்த்து ஒரு முடிவுக்கு வருதல்; அவ்வேலையை முடிக்கும் முறையையும் ஆராய்தலென்று கொள்க. மனத்தாபம் என்பது நிகழ்ந்தது எண்ணி ஓயாது நெஞ்சுளைதல். செய்ய - அழகிய. செம்மை என்னும் பண்புப் பெயர்ப் பகுதி திரிந்து செய்ய என்றாயிற்று. நல் என்றது, குலத்தின் உயர்வை. குடி - குடிக்கு நிலைக்களனான குழந்தையை உணர்த்துதலால் ஆகுபெயர். ஆகவே, அழகிய உயர்ந்த ஒரு குழந்தையைச் 'செய்ய ஒரு நற்குடி' என்றார். குலம் நீள்வதற்குக் குழந்தை இன்றியமையாதது என்பது வெளிப்படை. அங்ஙனமன்றிக் குடி என்பதை வீடென்று கொள்வாருமுளர். முன்: காலவாகுபெயர். மறைப்பொற்கொடி என்பதில், மறையென்பது பார்ப்பனக் குலத்தையும், பொற்கொடி என்பது இளமையையும் உணர்த்தவே, அத்தொடராற் காணும் பொருள் அழகிய இளம் பெண்ணாகிய பார்ப்பனி யென்பது. இஃது அன்மொழித்தொகை. இச் செய்யுட் பொருளை,

> "அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
> ஊதியமும் சூழ்ந்து செயல்"

என்னுந் திருக்குறளினுங் காண்க.

கதை: குழந்தை யில்லையென்று ஒரு கீரிப்பிள்ளையை வளர்த்துவந்த பார்ப்பனி யொருத்திக்குச் சில நாட்கள் கழிந்து மகப்பேறுண்டாயிற்று. குழந்தையைப் பெற்று மகிழ்ந்தாளாயினுங் கீரியின்பால் அன்பு தளர்ந்திலது. ஒருநாள் தன் குழந்தை

யைத் தொட்டிலிலிட்டுத் தூங்கவைத்துக் கீரியை அக்குழந்தைக்குக் காவலாக அருகு நிறுத்திப் பக்கல் இருந்ததொரு குளஞ் சென்று நீரெடுத்துத் திரும்பினள். இவள் திரும்புவதற்குள் தொட்டிலருகே ஒரு பாம்பு வந்தது ; அது குழந்தையைக் கடித்து விடாதபடி கீரிப்பிள்ளை அப் பாம்பைத் துண்டு துண்டாகக் கடித்துவிட்டது. அதனால் அதன் வாயெல்லாஞ் செந்நீர் பாய்ந்து சிவப்பாய்விட்டது. இதற்குள் பார்ப்பனி வீட்டுக்கருகே வந்த துங் கீரி மகிழ்ந்து முன்னே ஓடிற்று. பார்ப்பனி ஆராயாமல், குழந்தையைத்தான் அது கடித்ததென்றெண்ணி, நீர்க்குடத்தைக் கீரிப்பிள்ளையின் தலைமேற் போட்டு அதனைக் கொன்றனள். பின்பு வீடுசேர்ந்து நடந்தது கண்டு கீரிப்பிள்ளையை நினைந்து, தான் ஆராயாது செய்துவிட்டமைக்கு ஏங்கி அவ் வேக்கத்தாலேயே உயிர் நீத்தனள். (16)

நாவி னுனியி னயமிருக்கிற் பூமாதும்
நாவினிய நல்லோரும் நண்ணுவார்—நாவினுனி
ஆங்கடின மாகி லத்திருவுஞ் சேராள்முன்
ஆங்கே வருமரண மாம்.

(இ - ள்.) நாவின் நுனியில்-நாக்கு முனையில், நயம்-மகிழத் தக்க இன்சொல், இருக்கில் - உண்டாகுமானால், பூமாதும் - மலர் மகளும், நா இனிய - இனிய செஞ்சொல்லால் நாக்கு இனிமையடையப்பெற்ற, நல்லோரும்-நல்ல பெரியோரும், நண்ணுவார்-வந்து சேருவார், நாவின் நுனி-அங்ஙனமின்றி அந்நாக்கு நுனி, கடினம் ஆம் ஆகில் - வன்சொற்கள் பயின்று வலிதாகுமானால், அத்திருவும் - முன் சொன்ன திருவினளும், சேராள் - சேரமாட்டாள், ஆங்கு மரணம் வரும் - அதனால் சாவும் உண்டாகும்.

(க - து.) மக்கள் இன்சொல்லே உடையராதல் வேண்டும்.

நயம் மிக்க இனிய சொல், நயம் எனப்பட்டது. பூமாதும் நல்லோரும் நண்ணுவா ரென்றது, அவர் அருள் நண்ணும் என்றபடி. பூமாதின் அருள் இம்மைப்பயனுக்கும், நல்லோரின் அருள் மறுமைப் பயனுக்குமெனக் கொள்க. ஆங் கடினம் என்பதைக் கடினம் ஆம் என்று மாற்றுக. ஆங்கே அப்பொழுதே எனலுமாம். இச் செய்யுட் பொருள் முன்னும் வந்தது. (17)

ஈக்கு விடந்தலையி லெய்துமிருந் தேளுக்கு
வாய்த்த விடங்கொடுக்கில் வாழுமே—நோக்கரிய
பைங்கணர வுக்குவிடம் பல்லளவே துர்ச்சனருக்
கங்கமுழு தும்விடமே யாம்.

(இ - ள்.) ஈக்கு - ஈ என்னும் சிற்றுயிர்க்கு, விடம் - நஞ்சு, தலையில் எய்தும் - தலையிலே உண்டாகும், இரு தேளுக்கு—கருந் தேளுக்கு, விடம் - நஞ்சு, கொடுக்கில் - அதன் கொடுக்கில், வாழும் - இருக்கும், நோக்க அரிய - பார்ப்பதற்கு அருமையான, பை - பசிய, கண் - கூரிய கண்களையுடைய, அரவுக்கு - பாம்பு களுக்கு, விடம் - நஞ்சு, பல் அளவே - பல்லில்மட்டும் இருக்கும், துர்ச்சனருக்கு - (ஆனால்) கெட்ட குணமுடையவர்களுக்கோ, அங்கம் முழுதும் - அவர்கள் உடம்பு முழுவதும், விடமே ஆம் - நஞ்சேதா னிருக்கும்.

(க - து.) தீயோர் தொடர்பு சிறிதுமே கூடாது.

கொடுமை மிக்க தேளெனினுமாம். வாழும் என்றார், தேள் களுக்கு நஞ்சுக்கெனத் தனியே கொடுக்கொன்றிருத்தலாலென்க. நோக்கரிய என்பதை அரிய நோக்குப் பைங்கண் அரவு என்று மாற்றி, அந் நோக்கைப் பாம்புக்காக்குதலுமாம். கெடுதியே உருவமாயிருப்பவர் தீயோர் என்றபடி. மேல் வருஞ் செய்யுளும் இது. (18)

துர்ச்சனரும் பாம்புந் துலையொக்கி னும்பாம்பு
துர்ச்சனரை யொக்குமோ தோகையே—துர்ச்சனர்தாம்
எந்தவிதத் தாலு மிணங்காரே பாம்புமணி
மந்திரத்தா லாமே வசம்.

(இ - ள்.) தோகையே-பெண்ணே, துர்ச்சனரும்-தீயோரும், பாம்பும் - பாம்புகளும், துலை - (ஓர்) அளவில், ஒக்கினும் - ஒப்பா னாலும், பாம்பு துர்ச்சனரை ஒக்குமோ-பாம்புகள் கெட்டவரை (மற்றோர் வகையில்) ஒப்பாகுமோ? (ஒப்பாகாது ; ஏனெனில்,) பாம்பு மணிமந்திரத்தால் வசம் ஆம் - பாம்புகள் மணி மந்திரங் களால் அடங்கி நிற்கும், (ஆனால்) துர்ச்சனர்தாம் எந்த விதத் தாலும் இணங்காரே - தீயோர்கள் எவ்வகையான முயற்சியி னாலும் நல்லவழியில் திரும்பமாட்டார்கள்.

(க - து.) தீயோர் எவ்வகையினாலும் திருந்தார்.

துலை - அளவு கருவி; அளவுக்கானமையின் அஃதும் தோகை என்பதும் ஆகுபெயர்கள். அளவு என்பது பாம்புந் தீயோருந் தீமையில் ஓரளவினராதலை. மந்திரம் - மறைமொழி. மணிகளாலும் மந்திரத்தாலும் பாம்பை உரிமைப் படுத்துதல் வெளிப்படை. தீயாரை இணக்க இயலாதென்பதை இதன் 21 ஆம் பாட்டும்,

'கப்பி கடவதாக் காலைத்தன் வாய்ப்பெயினுங்
குப்பை கிளைப்போவாக் கோழிபோல்—மிக்க
கனம்பொதிந்த நூல்விரித்துக் காட்டினுங்கீழ் தன்
மனம்புரிந்த வாறே மிகும்'' [கீழ்மை

என்னும்நாலடியாரும் நன்குணர்த்தும். இவர்தங் கொடுமையை மேல்வருஞ் செய்யுளாலும் அறியலாம், (19)

கோம்புளதற் கைந்து குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே—வம்புசெறி
தீங்கினர்தங் கண்ணில் தெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி.

(இ - ள்.) கொம்பு உளதற்கு ஐந்து - கொம்பு உள்ளதற்கு ஐந்துமுழத் தொலைவும், குதிரைக்குப் பத்து முழம்-குதிரைக்குப் பத்து முழத் தொலைவும், வெம்பு கரிக்கு ஆயிரம் முழம் - சினங் கொள்ளுகின்ற யானைக்கு ஆயிரமுழத் தொலைவும், வேண்டும் - விலகிப்போக வேண்டும். (ஆனால்) வம்பு - தீமைகள், செறி - மிகுந்த, தீங்கினர்தம் - தீயோருடைய, கண்ணில் - கண்களுக்கு, தெரியாத - தெரியக்கூடாத, தூரத்து - தொலைவில், நீங்குவதே - விலகிப் போவதே, நல்ல நெறி - நல்ல வழியாகும்.

(க - து.) விலங்குகளினுங் கொடியரென்று நினைத்துத் தீயோர் கண்ணுக்குத் தெரியாதிருப்பதே நல்லது.

கொம்புள்ளவைகள் ஆடு மாடு முதலியன. முழம் என்பதை மற்றவற்றிற்கும் ஒட்டுக. வெம்புதல்-நெஞ்சிலே சினக்குறிப்பு ஒன்று வைத்துக்கொண்டு அதையே நினைத்து அதன் வண்ணமாதல். கரி: ஆகுபெயர். வம்பு-குற்றமில்லாத வழி வீண் போர் தொடுத்தல். (20)

அவ்விய நெஞ்சத் தறிவில்லாத் துர்ச்சனரைச்
சேவ்விய ராக்குஞ் செயலுண்டோ—திவ்வியநற்
கந்தம் பலவும் கலந்தாலும் உள்ளியது
கந்தங் கேடுமோ கரை.

(இ - ள்.) திவ்விய-மேன்மையான, நல் கந்தம்-நல்ல மணப் பண்டங்கள், பலவும்-பலவற்றையும், கலந்தாலும்-உடன் கலந்தாலும், உள்ளியது - உள்ளியினுடைய, கந்தம் - தீய நாற்றம், கெடுமோ - நீங்குமோ, கரை - நீ சொல், (அதுபோல) அவ்விய நெஞ்சத்து அறிவு இல்லா துர்ச்சனரை - பொறாமை கொண்ட நெஞ்சமுடைய அறிவில்லாத தீயோரை, செவ்வியராக்கும்-நல்ல

வராகத் திருப்பும், செயல் உண்டோ - செய்கையுமுண்டோ? (இல்லை யென்பது.)

(க - ரு.) தீயோரை நல்லவராக்குதல் இயலாது.

அறிவுடையார் அவ்விய நெஞ்சத்தாராய் இராராதலின், அந் நெஞ்சத்தை அறிவிலார்பால் வைத்து, "அவ்விய நெஞ்சத் தறிவில்லா" என்றார். செவ்வியர் - நல்லவர். செயலுண்டோ என்றது நல்லவராக்குஞ் செயல் தீயோர்பாற் பயன்படாதென்பதற்கு. திவ்விய நல் - ஒருபொருளன. கந்தம் இரண்டனுள் முன்னது அஃது உடைய பண்டத்தை உணர்த்துதலால் ஆகுபெயர். இது மணத்தின் மிகுதியைக்காட்டும். உள்ளி என்பது இங்கு வெள்ளைப் பூண்டு; வெங்காயத்தினும் மிக்க நாற்றமுடையது. உள்ளி வெள்ளைப்பூண்டுக்கு வருதலை, 'உள்ளி வெள்ளுள்ளி' எனச் சைவசமயநெறி என்னும் நூலில் வருதல் காண்க. (21)

துன்னு மிருமலுந் துர்ச்சனரு மோக்குமே
மன்னு மினிமையான் மாறுகிப்—பன்னுங்
கடுவுங் கடுநேர் கடுமொழியுங் கண்டாற்
கடுக வசமா கையால்.

(இ - ள்.) துன்னும் இருமலும் - மிகுந்துவரும் இருமல் நோயும், துர்ச்சனரும் - தீயோரும், மன்னும் - நீங்காத, இனிமையான் - இனிமைக்கு, மாறுகி - வேறுகி, பன்னும் - சொல்லப்படுகின்ற, கடுவும் - நஞ்சு போன்ற கைப்பான மருந்தையும், கடுநேர் - அம் மருந்தையொத்த, கடுமொழியும் - வன்சொல்லையும், கண்டால் - பார்த்தால், கடுக - விரைவாக, வசம் ஆகையால் - அடங்கி விடுதலால், ஒக்கும் - அவ்விருமலும் தீயோரும் ஒன்றுக்கொன்று ஒப்பாகும்.

(க - து.) தீயோர் கடுஞ்சொல்லையே விரும்பி அதற்கே அடங்குவார்கள்.

தித்திப்பான பண்டங்களால் இருமல் நோய் மிகும். தீயோரும் இன்சொல்லால் அடங்காமற் மீறுவர். மற்றும், கசப்பான மருந்துகளால் இருமல் நோய் நீங்கும்; அதுபோலவே, தீயோருங் கடுமொழிக்கே அஞ்சியடங்குவர். ஆதலால், அவ் விரண்டிற்கும் ஒப்புமை காண்க. துன்னுதல் - மிகுதல். மாறுகிக் கண்டால் வசமாகையால் ஒக்கும் என்க. மன்னும் இனிமையாவது, எப்பொழுதும் நீங்காத மணமும் நன்மையும். இனிமையான - இனிமைக்கு. பன்னும்-உலகத்தவரால் மருந்தென்று சொல்லப்படும், நேர் - ஒப்பு. 'ரேமே லெழுத்துக்கு நேர்' என்பதிற் காண்க. கடுக: விரைவுப்பொருளது. (22)

செங்கமலப் போதலர்ந்த செவ்விபோ லும்வதனந்
தங்கு மொழிசந் தனம்போலும்—பங்கியெறி
கத்திரியைப் போலுமிளங் காரிகையே வஞ்சமனங்
குத்திரர்பால் மூன்று குணம்.

(இ - ள்.) இளங் காரிகையே - இளம் பெண்ணே, செங்கமலப் போது - சிவந்த தாமரைப்பூ, அலர்ந்த செவ்வி போலும்- மலர்ந்த அழகையொத்த, வதனம் - முகமும், சந்தனம் போலும்- நல்ல மணமுடைய சந்தனத்தைப் போன்ற, தங்கு மொழி- இனிமை தங்கிய மெதுவு மொழியும், பங்கி - மயிரை, எறி - வெட்டுகின்ற, கத்திரியைப் போலும்-கத்திரிக்கோலைப் போலும், வஞ்சமனம்-கரவு மனமும் (என,) குத்திரர்பால் - வஞ்சகரிடத்தில், மூன்று குணம் - மூன்று கொடுந்தன்மைகள் உள்ளன.

(க - து.) உள்ளத்தில் தீமையொன்று கொண்டு வஞ்சகர்கள் முகத்தையும் மொழியையும் நன்மையாகக் காட்டுவது கண்டு அவரை நம்பி உறவாடலாகாது.

அலர்ந்த செவ்வியாவது மலர்ந்தபோது ஏற்படும் கிளர்ச்சி முதலிய அழகுகள். அதைப்போலவே வஞ்சகர் முகமும், புன்னகையும் எழுச்சியும் மிக்கதாய் இனிமையுடன் தெரியும். தங்கு மொழி - இனிமை பொருந்திய மொழி. தங்கித் தங்கி அடக்கமாகப் பேசு மெதுவு மொழியுமாம். அது சந்தனம் போலுதலாவது மென்மைக்கும் மணமாகிய நன்மைக்கும் உயர்வுக்கு மென்க. எறிதல் - வெட்டுதல்; இஃது இப்பொருட்டாதலை "வாளெறிந்தனன்" (சிலப். கொலை. 213) என்பதிற் காண்க. அறுத்தலென்றுங் கொள்க. "எறிவளை யார்ப்ப" (சிலப், கானல்) என்பதிற் போல. கத்திரி, வெட்டுந் தொழிலுக்கு உவமை ஆவது, சூழ்ச்சியால் தியன செய்கை. இறுதியில் என, உள என்று இரு சொற்கள் வருவிக்க, வதனம், மொழி, மனம் என்பவற்றிற்கு எண்ணும்மை விரிக்க. முகமும் மொழியும் மனமும் எனக் குத்திரர்பால் மூன்று குணம் உள என்று கூட்டுக. (23)

நீசனே நீச னினையுங்காற் சொற்றவறும்
நீசனே நீசன் அவனையே—நீசப்
புலையனு மென்றுரைக்கும் புல்லியனே மேலாம்
புலையனு மென்றே புகல்.

(இ - ள்.) நீசனே - புலையனோ, நீசன் - உண்மையான புலையன்?, நினையுங்கால் - நினைந்து பார்த்தால், சொல் தவறும் - சொன்ன சொல்லிலிருந்து தவறிப்போகும், நீசனே - புலையனே,

நீசன் - உண்மையான புலையனுவான்; அவனே - சொல் தவருத புலையனே. நீசப் புலையன் ஆம் என்று உரைக்கும் - இழிவான புலையனுவான் என்று சொல்லும். புல்லியனே - தாழ்ந்த தன்மையுடையவனே, மேலாம் புலையனும் - பெரும் புலையனுவான், என்று புகல் - என்று நீ சொல்.

(க - து.) இனத்தால் தாழ்வு கூருமல் தன்மையால் தாழ்வு கூறல் வேண்டும்.

மூன் றேகாரங்களுள் நடு நின்றது பிரிநிலை; ஏனைய அசைகள். நீசன் என்பவன் ஊனுண்பவன்; புலையன் என்பானும் அவன். நீசப் புலையன் என்றது தியதாய் நாறும் உடலுடைய ஊன் அயில்வானை. நீச்சு என்பது புலால் நாற்றம்; நீச்சுநாற்றம் என்பது வழக்கு. சொல் தவறுபவன் புலையனைவிடக் கீழாவான் என்பது. (24)

ஞானமா சார நயவா ரிடைப்புகழும்
ஏனைநால் வேத மிருக்குநெறி—தான்மொழியிற்
பாவநிறை சண்டாளர் பாண்டத்துக் கங்கைநீர்
மேவுநெறி யென்றே விடு.

(இ - ள்.) ஞானம் - அறிவும், ஆசாரம் ஒழுக்கமும், நயவாரிடை - விரும்பாதவரிடத்திலே, புகழும் - புகழப்படுகின்ற, ஏனை - இவையல்லாத, நால் வேதம் - நான்கு திருமறைகளின் அருங் கருத்துக்களும், இருக்கும் நெறி - இருக்கின்றமுறையை, மொழியின் - சொல்வோமானுல், பாவம் நிறை - தீவினை மிக்க, சண்டாளர் - நீசருடைய, பாண்டத்து - மட்கலத்தில், கங்கை நீர் - உயர்ந்த கங்கையாற்றின் நீர், மேவும் நெறியே என்று - கிடக்கும் முறையையே ஒத்திருக்கும் என்று, விடு - போற்ருமல் விட்டு விடு.

(க - து.) கற்றபடி நடக்கவேண்டும்.

தான்: அசை. ஏகாரந் தேற்றம், அதைப் பிரித்து நெறியோடு கூட்டுக. ஞானமும் ஆசாரமும் என்று எண்ணும்மை விரிக்க. ஞானம் - இங்கு மெய்யறிவு. நயவார் - விரும்பாதவர்: வினையாலணையும் பெயர். நயத்தல் விரும்புதற் பொருளில் வருமென்பது, "நயன் நயந்து" (புறம், 144.) என்பதிற் காண்க. (25)

குணநன் குணராக் கொடியோ ரிடத்திற்
குணநன் குடையார் குறுகார்—குணமுடைமை
நண்ணுச் சமண நகரத்தில் தூசொலிக்கும்
வண்ணுனுக் குண்டோ வழக்கு.

(இ - ள்.) குணம் உடைமை நண்ணு - ஆடை கட்டுந் தன்மையில்லாத, சமண் நகரத்தில்-சமண மதத்தினர் இருக்கும் பட்டினங்களில், தூசு ஒலிக்கும் வண்ணானுக்கு - அழுக்குடைகளை வெளுக்கும் வண்ணானுக்கு, வழக்கு உண்டோ - இருப்பு உண்டா? (இல்லை; அதுபோல) குணம் நன்கு உணராக் கொடியோரிடத்தில் - நல்ல தன்மைகளை அறியாத தீயோரிடத்தில், குணம் நன்கு உடையார்-நல்ல தன்மைகளையுடைய நல்லவர்கள், குறுகார் - சேரமாட்டார்கள், (அவர்கட் கொன்றும் வேலையில்லையென்றபடி,)

(க - து.) நல்லோர்க்குந் தீயோர்க்கும் ஏதுந் தொடர்பில்லை.

குண நன்கு - குண நன்மை. நன்கு - இங்குப் பெயர்; 'மிரம்ப' என்றுமாம். நண்ணு - சைவம் அடையாத என்னுங் குறிப்பினது. துவைத்துத் துணிகட்டு மியல்பு சமணர்க்கு இல்லை. தூசு - அழுக்கு. இஃது அழுக்குடைய துணியை உணர்த்துதலால் ஆகுபெயர். ஒலித்தல் - வெளுக்கடித்தல். "ஊரொலிக்கும் வண்ணார்" என்பது பெரியபுராணம் (திருக்குறிப்பு, 113,) (26)

ஆனை மருப்பு மருங்கவரி மான்மயிருங்
கான வரியுகிருங் கற்றோரும்—மானே
பிறந்தவிடத் தன்றிப் பிறிதோரு தேசத்தே
செறிந்தவிடத் தன்றோ சிறப்பு.

(இ - ள்.) மானே - பெண்ணே!, ஆனை மருப்பும் - யானையின் கொம்புக்கும், அரு கவரி மான் மயிரும் - அருமையான கவரிமானின் மயிருக்கும், கான வரி உகிரும் - காட்டில் வாழும் புலி நகத்திற்கும், கற்றோரும் - கற்றோர்க்கும், பிறந்த இடத்து அன்றி - தோன்றிய இடங்களில் அல்லாமல், பிறிதொரு தேசத்து - வேற்று நாடுகளில், செறிந்த இடத்து அன்றோ - தாம் சேர்ந்த இடங்களிலன்றோ, சிறப்பு - பெருமை!

(க - து.) கற்றோர்க்கு வேற்றூர்களில் மிக்க சிறப்புண்டாம்.

மருப்பும் மயிரும் உகிரும் அவ் விலங்குகளாற் போற்றப் படாமையின், அவற்றிற்கும் பிறந்தவிடத்துப் பெருமையில்லை. (27)

தலைமயிருங் கூருகிரும் வெண்பல்லுந் தத்தம்
நிலையுடைய மானவரு நிற்கு—நிலைதவறுந்
தானத்திற் பூச்சியமே சாரு நிலைதவறுந்
தானத்திற் பூச்சியமோ தான்.

(இ - ள்) தலை மயிரும் - தலையின் மயிரும், கூர் உகிரும் - கூரிய நகமும், வெண் பல்லும் - வெள்ளை நிறமுடைய பல்லும்,

